உ

# குன்றக்குடி
# அருள்தரு வீரமாகாளியம்மை
# பதிகம்



வெளியிடுகின்றவர்கள் :

திருக்கயிலாய பரம்பரை குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம்
குருமகா சன்னிதானம் (46)

தவத்திரு **குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்** அவர்கள்

நாள் : **22-8-2004**

ஆசிரியர் :


வித்துவான். **க. கதிரேசன்** எம்.ஏ.,பி.எட்.,
குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனப்புலவர், குன்றக்குடி.



வெளியீடு :

**கோ. சீனிவாசன்** எம்.ஏ.,எம்.எட்.,
தலைமை ஆசிரியர்,
தருமைக்கயிலைக் குருமணி மேல்நிலைப்பள்ளி, குன்றக்குடி.

குன்றக்குடி

# அருள்தரு வீரமாகாளியம்மை பதிகம்

ஆசிரியர் :

வித்துவான். க. கதிரேசன் எம்.ஏ.,பி.எட்.,

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனப்புலவர்

குன்றக்குடி

வெளியீடு :

கோ. சீனிவாசன் எம்.ஏ.,எம்.எட்.,

தருமைக்கயிலைக் குருமணி மேல்நிலைப்பள்ளி

குன்றக்குடி

உ

சிவ சிவ

"தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே"

தவத்திரு
குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்
✆ : 04577 - 264227
- 264466

---

நாள் : 29-7-2004

## வாழ்த்துரை

குன்றக்குடி அருள்தரு வீரமாகாளியம்மன் மீது நமது ஆதீனப்புலவர் க. கதிரேசன், பக்திப்பதிகம் பாடியுள்ளது பரவசத்துக்குரியது.

"ஏட்டினிலே ............................ என்று தொடங்கி
கோட்டமாய் உயிருக்குள் குடிகொண் டினிக்கின்ற
கைமருந் தல்ல வோநீ!"

என்று நிறைவுறும் பாடல் மூலம் அம்மையின் அளப்பரிய பெருமையில் நம் ஆதீனப் புலவர் கதிரேசன் வைத்திருக்கின்ற அளப்பரிய பக்தி ஈடுபாட்டைப் புரிந்துகொள்ள முடிகின்றது. பதிகத்தை நாள்தோறும் ஓதி அம்மையின் அருளைப் பெறலாம்.

இந்நூல் வெளிவருவதற்கு முழுமுயற்சியும் செய்த நம் ஆதீனப் பள்ளித் தலைமை ஆசிரியர் கோ. சீனிவாசன் மிகவும் பாராட்டுக்குரியவர். அவர் பணி சிறக்க நல்வாழ்த்துக்கள்

என்றும் வேண்டும் இன்ப அன்பு

பொன்னம்பல அடிகளார்

குன்றக்குடி

# அருள்தரு வீரமாகாளியம்மை பதிகம்

## காப்பு

வாகையினை மேன்மேல் வழங்கி உயர்த்துமொரு
தோகையடிப் பிள்ளை துணை.

1.

பெருமான் எந்தத் திறம்நிற்கும்
பேணி அந்தத் திறம்இயலும்
பெரிய பொருளே! பெருமாட்டீ!
பேற்றை அருளும் முதற்பொருளே!
உருவார் எப்பே ரண்டத்தும்
உள்ள பொருட்கோர் கருப்பொருளே!
உயிர்கட் குரிய நலப்பேறாம்
உயர்பே ரின்பம் உதவுகிற
அருளே நிலைகொள் உரிப்பொருளே!
அடியோம் அகத்தில் உறுபொருளாய்
அமர்ந்தாய் எனினும் பயன்கொள்ள
ஆகும் வகையொன் றறியாத
பெரும்பே தையாய்ப் போகாமல்
பேணும் நிலைதா மாகாளீ!
சகலம் பூத்த பெருவாழ்வே!
சார்ந்தோம் அருள்வாய் துணைநீயே.

2.

ஒற்றை நலத்தால் பதினாறும்
உவந்தே உரிமை எமதாக்க
உள்ளம் கொண்டோம்! உறுதிதரு
உன்றன் கமலச் சேவடிகள்
உற்றோம்! கல்வி நல்லறிவோ(டு)
ஓயா வெற்றி வலிமைஅழ(கு)
உயர்பண்(பு) இளமை நன்மக்கள்
ஓங்கு செல்வம் தானியங்கள்
முற்றும் துணிவு நுகர்ச்சியொடு
வளரும் நல்லூழ் நலவாழ்வு
வாழ்நாள் மன்னு புகழ்யாவும்
வாய்க்கக் கடைக்கண் ஒன்(று)எம்பால்
சற்றே அருள்வாய் மாகாளீ!
சத்தீ! சிவத்தின் பங்கினளே!
சகலம் பூத்த பெருவாழ்வே!
சார்ந்தோம் அருள்வை துணைநீயே.

3.

அமுதப் பெருமான் அகத்தமர்ந்த
அமுதே! அன்பர் அகந்தன்னில்
அருளே கனிந்த நறுங்கனியே!
கனியின் சுவையே! சுவைப்பயனே!
கமுகாய் விளைந்த தீங்கரும்பே!
கன்னல் வழங்கு தீஞ்சாறே!
காய்ச்சி எடுத்த சுவைப்பாகே!
கறந்த நுரைப்பால் விளைபயனே!
அமுதம் ஏந்தா(து) அல்லல்எலாம்
அமுதாய் ஏந்தும் எனதுளத்(து)
அனலை மாற்றித் தண்மைதரு
அமரர் தருவே! உயிர்க்குலமாம்
சமுதா யத்துப் பெருந்தலைவன்
சார்ந்த கருணைப் பெருந்தலைவீ!
சகலம் பூத்த பெருவாழ்வே!
சார்ந்தோம் அருள்வை துணைநீயே.

4.

கொண்டல் குழலில் குளிர்பிறையும்
கோல மலரும் குடிகொள்ளக்
கொழிக்கும் கருணைத் திருமுகத்தில்
கொள்ளை நீறும் குங்குமமும்
கெண்டை இரண்டும் செவ்விதழும்
கிளர்புன் முறுவல் இவைதாங்கிக்
கேழ்ஆர் மார்பில் மணிமாலை
கிளர்ந்து மணக்கும் மாலையிடை
உண்மை மங்கல அணிஒளிர
ஒண்மைச் செங்கை வரம்அபயம்
ஓங்கு சூலம் தோள்வளைகள்
ஒப்பில் வயிர வளைமிளிரத்
தண்ணந் தாளில் தண்டை பிற
தரித்த வீர மாகாளீ!
சகலம் பூத்த பெருவாழ்வே!
சார்ந்தோம் அருள்வை துணைநீயே.

5

எங்கும் எதிலும் எவருள்ளும்
இருக்கும் தாயே! இந்நிலத்தில்
என்றும் ஐந்தாய் இருக்கின்றாய்!
இனிய நீரில் நான்கானாய்!
மங்காத் தீயில் மூன்றானாய்!
மதிக்கும் வளியில் இரண்டானாய்!
மலர்விண் வெளியில் ஒன்றானாய்!
மானே இவற்றைப் படித்துள்ளேன்.
இங்கென் உளத்தும் உறைகின்றாய்
என்றும் உரைப்பர் காண்கில்லேன்!
எவ்வா றுள்ளாய் அறிகில்லேன்!
எழிலார் இருப்பை யான்காணத்
தங்கும் நீயே காட்டிடுக!
தாள்கள் பற்றி ஒளிபெறுவேன்!
சகலம் பூத்த பெருவாழ்வே!
சார்ந்தேன் அருள்வை துணைநீயே.

6.

மழையால் ஊறும் மேட்டுநிலப்
பாறை நின்ற கிணறேபோல்
மயில்உன் அருள்சின் நாள்பெற்றேன்!
மகிழ்ந்தேன் சிலபோ(து) ஐயமிலை!
விழையும் கங்கை நீர்போல
விரைந்தும் நிலைத்தும் மிகப்பெருகும்
வீறார் உன்றன் அருள்வெள்ளம்
விழைந்தேன்! ஆட முன்நின்றேன்!
தழையும் கருணைப் பெருந்தாயே
தாரா தொழியின் நினையன்றித்
தந்து தாங்க வேறுண்டோ?
தருவாய் இன்ப அருள்வெள்ளம்!
சழக்கே கொண்ட புத்தடியேன்
சார்ந்தேன் சழக்குத் தீர்த்தருள்வாய்!
சகலம் பூத்த பெருவாழ்வே!
சார்ந்தேன் அருள்வை துணைநீயே.

7

உயிர்க்குள் ஒளிரும் உயிரானாய்!
உவந்தே உயிர்கள் ஈடேற
ஓரைம் பூதச் சேர்க்கையினால்
ஊக்கும் மெய்யும் நீயானாய்!
செயிரே எண்ணும் சிந்தையரைச்
சேரா வன்மை இயல்பினளே!
சீரார் நன்றே சிந்திப்பார்ச்
சேரும் இடைமை இயல்பினளே!
வயிரக் குன்றாம் அருளாளர்
வளப்பே ரின்ப வீடுபெறு
வழிக்குத் துணையாய் வழிநடத்தி
வாழ்த்தும் மென்மை இயல்பினளே!
சயிலச் சிவத்தின் திருவருளாய்ச்
சலியா தியங்கும் இயல்பினளே!
சகலம் பூத்த பெருவாழ்வே!
சார்ந்தோம் அருள்வை துணைநீயே.

8.

காட்டிலோர் வேட்டுவன் வேட்டைக்கு வைத்திட்ட
கண்ணியில் காலை ஊன்றிக்
கட்டுண்ட கலைமான்அக் கண்ணியில் நின்றேறிக்
கடிதோட முயலு தோறும்
மாட்டியுள்ள மானின்கால் மேன்மேல் இறுக்குற்று
மற்றதுவி டாமை போல
மண்ணகத் துன்பத்தில் மதியிலாச் செயல்களால்
மாட்டிக்கொண் டுள்ள யான்என்
வாட்டங்கள் தீர்வணம் வலிந்துமுயல் தோறும்என்
வலியஐம் புலன்கள் ஒன்றாய்
வலிந்தெனைப் பற்றித்தம் வலியெலாம் சேர்த்துத்தம்
வலையிலே வீழ்த்தல் நன்றோ?
மேட்டிமை கொண்டுயான் மேலேறி நன்னலம்
மேதினியில் பெற்று வாழ
மேலான தெய்வமே மெய்வீர மாகாளி
மேன்மைகள் அருளு நீயே.

9.

கூட்டிற்கி டக்கின்ற ஐம்புலனும் இல்லாது
கொச்சையாய்க் கிடக்கு நாளில்
கொள்மலப் பற்றோடு கன்மம்தொ லைக்களணிக்
கொடுத்தனை கோல நான்கும்
காட்டுவித் தாய்எலாம் கண்டிலேன் யான்கொண்டு
கண்டதே காட்சி என்று
கொண்டனன்! கரைஏறும் எண்ணமே கொள்கிலன்
காலம்க ழித்து விட்டேன்!
ஊட்டுவித் தாய்அதை உண்டுண்டு தேறாமல்
உழல்கின்ற பிள்ளை யானேன்!
உவந்தகண் தூண்டிலில் உறமாட்டி என்னைஉன்
ஒப்பிலருள் நீரில் விட்டு
மாட்சிதந் தருளுவாய் மதிநலம் தருகுவாய்
மாபுகழ் காத்து நிற்பாய்!
மேலான தெய்வமே மெய்வீர மாகாளி
மேன்மைகள் அருளு நீயே!

(கொச்சை நிலை = தன்னிலை - கேவலநிலை.
நான்கு = உடம்பு, கருவிகள், உலகு, நுகர்பொருள்)

10

ஏட்டிலே காண்கின்ற இன்மருந் தென்றுனை

எண்ணுமோர் எண்ணம் இல்லை!

எட்டிப்ப றிப்பார்கள் கைகால்கண் குத்திட

ஏந்துமுட் புதர்நி றைந்த

காட்டிலே பயிலுமோர் கடுமருந் தென்றுனைக்

கனவிலும் கருத வில்லை!

கால்கடுக் கப்பல் கடைதோறும் போய்க்கொளும்

கடைமருந் தல்ல நீயே!

வீட்டிலே எனதுதாய் விரும்பியே அம்மியில்

விழுதாக்கு மருந்து மல்லை!

வெறுப்பேற்றிக் கைக்கின்ற வேறுபிற மருந்தல்லை!

விழைமருந் தல்ல வோநீ!

கோட்டமாய் உயிருக்குள் குடிகொண்டி னிக்கின்ற

கைமருந் தல்ல வோநீ!

குன்றக்கு டிப்பாறை வீரமா காளிஉட்

கொண்டனன் அருள்வை நீயே.

(கோட்டம் = திருக்கோயில்)



